# ஏழைச் சக்கிலி முதலிய கதைகள்

எழுதியது
டி. ஜி. தேவராஜி




கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்

# 1. ஏழைச் சக்கிலி

ஓர் ஊரில் சக்கிலியொருவன் வசித்து வந்தான். அவனோ மிக்க ஏழை; ஆனால் வேலையில் கெட்டிக் காரன். அவனைப்போல் அவ்வூரில் உறுதியாகவும் அழகாகவும் செருப்புத் தைக்கக்கூடியவர் எவரு மில்லை. அவன் கஷ்டப்பட்டுச் சம்பாதித்து ஜீவித்து வந்தான். ஒருநாள், செருப்புத் தைக்கத் தோல் இல்லாதுபோயிற்று. அவனுக்கோ அதிக துக்கம் ஏற்பட்டது.

தன்னிடம் இருந்த தோல்த் துண்டுகளை எல்லாம் தேடி எடுத்துச் சேர்த்து வைத்தான். அவை அத்தனையும் சேர்ந்தபொழுது ஒரு ஜதை செருப்புக்குத்தான் போதியதாயிருந்தது. அன் றிரவு அந்தத் தோலை எல்லாம் வெட்டி ஒழுங்குப் படுத்திவைத்து, மறுநாள் தைத்து விற்க எண்ணித் தூங்கினான். மறுநாள் எழுந்து தன் வேலையைத் தொடங்குவதற்குத் தோலை எடுக்கப்போனான். ஆனால் என்ன ஆச்சரியம்! இவன், முந்தின நாள் அளவாக அறுத்து வைத்த தோல்களால் அழகிய ஒரு ஜதைச் செருப்பு தைத்து வைக்கப்பட்டிருந் தது; அதைக் கண்டு, கூக்குரலிட்டு, தன் மனைவி யைக் கூப்பிட்டான், அவள் ஓடோடியும் வரவே அவளுக்கு அந்த அதிசயத்தைக் காட்டினான். அவளும் மூக்கின்மேல் விரலை வைத்து அதிசயித் துப் பதுமைபோல நின்றுவிட்டாள்.

அதே சமயத்தில் வேளாளன் ஒருவன் தனக்கு ஒரு ஜதைச் செருப்புத் தேவை என்று வெளியில் நின்று கேட்டான். இவன் அந்த ஒரே ஜதைச் செருப்பைக் கொண்டுவந்து அவனுக்குக் காட்டி

ஞன். வந்தவன், அதன் தையலின் அழகையும் வேலைப்பாட்டையும் பார்த்து மகிழ்ந்து, அதற்கு இரண்டத்தனை விலை கொடுத்து வாங்கிச் சென்ருன். அவனுக்கும், அவன் மனைவிக்கும் ஒரே வியப்பும் சந்தோஷமும் தோன்றின.

சக்கிலி உடனே ஓடிப்போய்த் தனக்குக் கிடைத்த அதிகப் பணத்திற்கு, இரண்டு ஜதை செருப்புக்குத் தேவையான தோல் வாங்கி வந்தான். அன்று வயிருரச் சாப்பிட்டு இருவரும் மகிழ்ந்திருந்தனர்.

அன்றிரவு, படுக்கப்போகுமுன், அவன் வழக்கம்போல் தான் வாங்கி வந்த தோலைச் சுத்தி செய்து, வழுவழுப்பாக்கி, அளவாக அறுத்து, மறுநாளில் தைக்கத் தயாராக வைத்துவிட்டுப் படுத்துக்கொண்டான். அடுத்த நாள் காலையில் பார்த்தபோது, தான் வைத்த தோலிருந்த இடத்தில், மிக அழகாகத் தைக்கப்பட்ட இரண்டு ஜதை செருப்புக்கள் இருக்கக் கண்டு, அதிசயித்து நின்றுகொண்டிருந்தான். இவ்விஷயத்தையறிந்த அவன் மனைவியும் திகைத்து நின்ருள். தங்கள் வீட்டு வாசலில் வந்து நின்ற வண்டியிலிருந்து இரண்டு பிரபுக்கள் இறங்கி இவனைக் கூப்பிட்டு, ஏதேனும் செருப்புக்கள் தயாராக இருக்கின்றனவா என்றும் எத்தனை ஜதை கிடைத்தாலும் தாங்கள் விலைக்கு எடுத்துக்கொள்ளுவதாகவும் சொன்ஞர்கள். "ஐயா! இரண்டே ஜதை செருப்புக்கள்தான் என்னிடம் இருக்கின்றன; அதிகமில்லை. ஏழை! நான் செய்யக்கூடியது இதுவே" என்ருன். "சரி, இப்பொழுது இந்த இரண்டு ஜதை மிக்க அவசியம். சீக்கிரம் அவற்றைக் கட்டிக்கொடு" என்று அவற்றைப் பெற்று, பணத்

தைக் கொடுத்துவிட்டுச் செருப்பை வாங்கிக் கொண்டு வண்டியேறிப் போய்விட்டனர்.

அவர்கள் கொடுத்துப்போன பணம், சக்கிலி யின் செலவுபோக, நாலு ஜதை செருப்புக்குப் போதுமானதாக இருந்தது. சக்கிலி, உடனே தோலை வாங்கி வைத்துவிட்டுப் பிற அலுவல்களைப் பார்த்து வந்தான்.



ஏழைச் சக்கிலி

இவன் அன்றிரவு படுக்கப்போகுமுன் வழக் கம்போல் அந்தத் தோலை அளவுப்படி அறுத்து ஒழுங்குப்படுத்தி வைத்துவிட்டுப் படுத்துத் தூங்கி ஞன். மறுநாள் அந்தத் தோலைக் கொண்டு நாலு ஜதை செருப்பைத் தைத்து முடிக்கலாம் என்று எடுக்கப் போஞன். அந்தோ! என்ன ஆச்சரியம்! நாலு ஜதை செருப்பு நேர்த்தியாக தைத்து வைக்

கப்பட்டிருந்ததைக் கண்டான். இவன் அவற்றின் அழகையும் வேலைத் திறத்தையும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கும்போதே 'எனக்கு, உனக்கு' என்று மக்கள் இவன் வீட்டைத் தேடிவந்து அச் செருப்புக்களை நல்ல விலை கொடுத்து வாங்கிப்போய் விட்டனர். விலையும் அதிகமாகவே கிடைத்தது. ஒருநாள் புருஷனும் மனைவியுமாக உட்கார்ந்துகொண்டு, "இரவுகளில் எவர் வந்து நாம் வைக்குந் தோலைச் செருப்பாகத் தைத்து வைக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். இதில் ஏதோ மர்மம் இருக்கிறது: இதையறியாமல் விடக்கூடாது" என்று ஒரு தீர்மானம் பண்ணிக்கொண்டனர்.

அன்று இரவில் வழக்கம்போல் போய்ப் படுத்துக்கொண்டு, சிறிது நேரத்திற்கெல்லாம் விழித்து விட்டனர். கதவினண்டை வந்து உட்கார்ந்து கொண்டனர். அன்று பகல் அந்தக் கதவில் இரண்டு துவாரங்களை யாருக்கும் தெரியாதபடி செய்து வைத்திருந்தனர். அத்துவாரங்களண்டை கண்ணைவைத்தபடியே இரவு முழுதும் உட்கார்ந் திருந்தனர்.

நடுச்சாமத்தில் அவர்களுடைய முற்றத்தின் வழியாக சிறு குருவிகள் கூட்டமாக வந்து இறங்குவதுபோலத் தோன்றிற்று. அக் கூட்டத்திலிருந்து ஒரு குருவி வந்து ஊசியை எடுத்தது. மற்றொரு குருவி நூலை எடுத்தது. இன்னொரு குருவி கோத்துக் கொடுத்தது. மற்றொன்று நூலுக்கு மெழுகு தடவிற்று. இவ்விதமாய் அக்கூட்டத்தவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலையாகச் செய்து இவன் வைத்திருந்த தோல் முழுவதையும் அநேக ஜதைச் செருப்புகளாகத் தைத்து வைத்து

விட்டன. குருவிகள் மாதிரித் தோன்றியவைகள் உண்மையில் குருவிகளல்ல. அவை வனதேவதைகள் என்பதை சக்கிலி அறிந்தான். வனதேவதைகள் ஒருவகை ஆவிகளாம். தமக்கு இஷ்டமான வடிவம் எடுத்து வனங்களிலும் தோட்டங்களிலும் உள்ள மலர்களில் வந்து உட்கார்ந்து விளையாடுபவையாம். உண்மைபேசும் பிள்ளைகளிடமும், வஞ்சனை, ஏமாற்றம், திருட்டு முதலிய கெட்ட குணங்கள் இல்லாத பிள்ளைகளிடமும், உண்மையாக உழைத்துக் கஷ்டப்படுகிறவர்களிடமும் அவற்றிற்கு அதிகப் பிரியம் என்றும் சிலர் சொல்லுகிறார்கள்.

மறுநாள் இரவு இத்தேவதைகளுக்கு ஓர் விருந்து வைக்கவேண்டும் என்று தீர்மானித்தனர்; ஆகவே அன்று பகல் முழுவதும் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யலாயினர். வழக்கம்போல் அன்றிரவு தோல் வைக்கும் இடத்தில், இவர்கள் தோலை வைக்கவில்லை. ஆனால், அங்கு ஒரு பெரிய தட்டத்தை வைத்திருந்தனர். அத் தட்டத்தில் சிறிய கிண்ணங்களில் இனிமையான பாலும், பானகமும், பாயஸமும், மிக்க சுவையுள்ள பற்பல பலகார வகைகளும் வைத்திருந்தனர்.

அன்றிரவு, வழக்கப்போல் இத் தேவதைகள் வந்து தோலைத் தேடின; அகப்படவில்லை. ஆனால் அங்கு தட்டமிருப்பதைக்கண்டு அதை நான்கு தேவதைகள் தூக்கிவந்து நடுவில் வைத்தன. பிறகு அதன் மூடியைத் திறந்தன. அங்கிருந்த பலகார வகைகளும், பழ தினுசுகளும், பருகும் பானங்களும் வீசிய வாசனையால் அவைகளின் வாயில் நீர் ஊறியது. வைக்கப்பட்டிருந்த சிற்றுண்டிகளை மிகப் பிரியத்துடன் அவை எல்லாம்

உண்டு, நேர்த்தியாக நடனங்கள் புரிந்து, கை கோத்துக் கூத்தாடி, கும்மியடித்துப் பறந்து சென்றுவிட்டன.

அன்று முதல் அந்தச் சக்கிலியின் வீட்டில் யாதொரு குறையுமிருந்ததில்லை. நல்ல வியாபாரமும் பெருகியது. வெளியூர்களிலிருந்தும் கிராக்கி வரலாயிற்று. எத்தனை ஜதை செருப்பு வேண்டியிருந்தாலும் கேட்டவர்களுக்குச் சொன்ன கெடுத்தவறாமல் கொடுத்து வந்தான். ஜனங்களுக்கு இவனிடம் நம்பிக்கையும் நல்லெண்ணமும் பிறந்தன. இவன் ஒரு நாணயமுள்ள பெரும் வியாபாரியாக விளங்கினான். தன்னைப்போல் ஏழையாயிருந்த உழைப்பாளிகளுக்கும் தன்னிடமே வேலை கொடுத்துக் காப்பாற்றி வந்தான்.

## 2. பணப் பேயாண்டி

நெடுங்காலத்திற்கு முன், மேல்நாட்டில் ஒரு பிரபு வசித்துவந்தார். அவருக்கு இரண்டே குழந்தைகள் இருந்தனர். ஒன்று ஆண், மற்றொன்று பெண். அவர், இவ்விருவரையும் தமது இரு கண்களைப்போல நேசித்தும், பாதுகாத்தும் வந்தார். இவர்கள் கேட்ட பொருட்களை மட்டுமல்லாமல், இவர்கள் கேட்காத பொருட்களையும் அவர் கொடுத்து இவர்களைச் சந்தோஷப்படுத்தி வந்தார்.

[illegible]னை தாயார் அதிகக் காய்ச்சலால் திடீரென்று இறந்துபோனார். தகப்பனாரும் பிள்ளைகளும் மிகவும் துக்கப்பட்டனர். இவ் வருத்தத்தாலேயே அந்தப் பிரபுவும் நோய்வாய்ப்

பட்டார். நோயும் வளர்ந்தது. அவர் நிலைமை மிக்க மோசமாகிவிட்டது. ஆகவே, பிரபு தன் தம்பியை வருவித்தார். தம்பியும் வந்தான். அவர் தம்பியிடம் ஆஸ்திகளைப்பற்றிய விபரங்களைச் சொல்லித் தம் இரு குழந்தைகளையும் அவன் கையில் ஒப்புவித்து, அவர்கள் தகுந்த வயதடைந்ததும் தன் சொத்துக்களை அவர்களிடம் ஒப்பு விப்பதாகத் தமக்கு வாக்களிக்கும்படி கேட்டுக் கொண்டார். தம்பியும் வாக்களித்தான். அவரும் தமது கண்ணை மூடினார்.

தம்பியோ சில நாள் அக் குழந்தைகளை அன்பாகப் பார்த்து வந்தான். பிறகு. ஒரு யோசனை தோன்றிற்று. இவர்களை ஒழித்துவிட்டால், தானே இவர்கள் சொத்துக்களைக் கைப்பற்றலாம் என்பதே அது. கெட்ட எண்ணம் உடையனாகி, இவ்விருவரையும் ஒரே நாளில் காட்டிற்கு கொண்டுபோய் வெட்டிப்போட ஏற்பாடு செய்தான். இரண்டு கொலைபாதகர்கள் இந்தக் குழந்தைகளை வெட்டிவிடச் சம்மதித்து ஆளுக்கு ஆயிரம் பணம் பெற்றுக்கொண்டனர்.

சிற்றப்பனாகிய புஷ்கரன், இச்சிறுவரைத் தான் ஒரு நாளைக்கு, சென்னைமா நகருக்கு அனுப்பப் போவதாகவும், அங்கு சென்றால் பற்பல காட்சிகளைக் காணலாம் என்றும் சொன்னான். கள்ளங் கபடறியாச் சிறுவர்கள் அதை மெய்யென்றெண்ணி, 'சென்னையில் என்னென்ன பார்க்கலாம்?' என்று கேட்டனர். "சென்னையில், மின்சார விளக்குகள், ஏறி விளையாட மின்சார இராட்டினம், மின்சாரத்தால் ஓடும் ரயில் வண்டி அதிசயம், டிராம் வண்டி, கூடகோபுரங்கள், மாட மாளிகைகள், பெரிய பெரிய ஆலைகள், பொருட்

காட்சி சாலைகள், உயிர்க்காட்சி சாலைகள், ஒளிச் சித்திரப் படக் காட்சிகள், மோட்டார் வண்டிகள், நீராவியால் ஓடும் படகுகள், பேசும் படம் பிடிக்கும் சாலைகள் முதலிய வேறு பலவிதமான விநோதக் காட்சிகளைக் காணலாம்" என்று சொல்லி ஆசை மூட்டி வைத்திருந்தான்.

குறித்திருந்த நாளிற் கொலையாளிகளும் வந்தனர். குழந்தைகளைத் தூக்கித் தோள்மேல் வைத்துக்கொண்டு, இவர்களிருந்த கிராமத்தைக் கடந்து, ஒரு நெடுஞ் சாலை மார்க்கமாய்ப் போய் ஒரு கிளை வழியிற் சென்று ஒரு காட்டிற்குள் நுழைந்தார்கள்.

வழியில் இக்குழந்தைகள் தோளில் உட்கார்ந்தபடியே இக்கொலைக்காரர் பேசிக்கொண்டு வந்ததை உற்றுக் கேட்டார்கள். பின் அப்பாலகர்கள் அந்த ஆட்களை பல கேள்விகளைக் கேட்கவே அக்கொலையாளிகளின் மனமும் இளகி உருகலாயிற்று.

அவர்களில் ஒருவன், வேறு பாஷையில் குழந்தைகளுக்குத் தெரியாவண்ணம் மற்றவனை நோக்கி, 'அடே! இச்செல்வர்களை எப்படியடா கொல்வது? என் மனம் பதைக்குதடா! அவனுக்கு என்னடா துரோகம் இச்சிறுவர்கள் செய்தார்கள்? நான் ஒருக்காலும் இவர்கள்மேல் கை வைக்கவே மாட்டேன்' என்றான்.

ஆனால் மற்றவனோ 'அதெப்படி நீ இப்படிச் சொல்கிறாய் இப்போது? இதற்காகவென்றுதானே ஒப்புக்கொண்டு கைநீட்டிப் பணமும் பெற்றுக் கொண்டாய்: இல்லையா? இப்போது "மாட்டேன்" என்று எப்படிச் சொல்லலாம்? இந்தப் புத்தி, நீ

பணம் வாங்குவதற்கு முன்னமேயே இருந்திருக்க வேண்டும்!' என்று அவனைக் கண்டித்தான். இவ்விதம் உண்டான வாக்குவாதத்தால் இவ்விருவருக்கும் பெரும் போர் மூண்டு ஒருவன் ஓடியே போய்விட்டான். இக்காரியங்கள் நடந்தபோது, பிள்ளைகளை இளைப்பாறவும் சற்று ஓடியாடவும் கீழே இறக்கிவிட்டிருந்தார்கள். மறுபடி இவர்கள் புறப்படும்போது, மற்றவன் எங்கே என்று குழந்தைகள் கேட்டனர்; அதற்கு இருந்தவன் 'இதோ வந்துவிடுவான், பக்கத்தில் கடைகளிருந்தால் கொஞ்சம் தின்பண்டம் வாங்கிவரப் போயிருக்கிருன்' என்று சொல்லிக்கொண்டே இவ்விருவரையும் சிறிது தூரம் காட்டிற்குள்ளாகவே கூட்டிச் சென்று, சில இலந்தைப் பழங்களைப் பறித்து அவர்களிடம் கொடுத்து 'இவற்றை இங்கேதானே இருந்து தின்றுகொண்டிருங்கள். நான் போய் மற்றவனைக் கூட்டிவருகிறேன். வேறு பழங்களும், தின்பண்டங்களும் வாங்கி வருகிறேன்' என்று சொல்லிவிட்டு மெல்லச் சென்று மறைந்தே போய்விட்டான். பொழுது போயிற்று; ஆட்களைக் காணேம். குழந்தைகளுக்கோ பசியும் தாகமும் மேலிட்டன. வெளிச்சம் இருந்தவரையில் இங்கும் அங்கும் ஒருவரையொருவர் விடாமல் திரிந்துகொண்டிருந்தனர். இப்போதோ உடல் களைத்துப் போயிற்று. ஐயோ! பாவம்! பசிப்பிணியைச் சிறிதுமறியாத பாலர்கள் பசியாலும் தாகத்தாலும் வாடலாயினர். அச்சம் வேறு உண்டாகிவிட்டது. ஒருவரும் இல்லாத தனி இடத்தில் சில பறவைகளின் சப்தத்தையும் மிருகங்களின் சத்தத்தையும் கேட்டு நடுங்கலாயினர். மேலும் குளிரும் நடுக்கத் தொடங்கிவிட்டது!

செல்வத்தில் பிறந்த சீமானின் பிள்ளைகள்! செல்வ மாய் வளர்ந்த சிசுக்கள்! பஞ்சு மெத்தையில் படுத்து வந்த பாலர்! கனத்த கம்பளி உடை தரித்து கணப்பண்டையில் கதைக் கேட்டு பின் கண் வளர்ந்து வந்த கண்மணிகள்!

சிறிது நேரம் ஒருவருக்கொருவர் தைரியம் சொல்லி வந்தனர். தூக்கம் அவர்களைத் தள்ள ஆரம்பித்தது. பாலர் இருவரும் ஒருவரை ஒருவர் இறுகக் கட்டித் தழுவிக் கரடுமுரடான காட்டுத் தரையிலே படுத்துறங்கலாயினர். படுத்தவர் மறு படியும் எழுந்திருக்கவே இல்லை.

ஒரு துணையும் இல்லாமல் அநாதைகளாக, படுத்தது படுத்தபடியே கிடந்த பாலரைப் பார்த்த சிறு குருவிகளும், தேன் சிட்டுகளும், மணிப் புறாக்களும் அவர்கள் இறந்துதான் போயினர் என்று அறிந்து, இலைகளைக் கொய்து அவர்கள் மேல் போட்டு மூடி, மலர்களைத் தூவி தங்கள் இனிய கீதங்களைப் பாடி அவர்களின் மறைவுக் காகத் துக்கங் கொண்டாடின.

இந்தப் படுகொலைச் செய்தி மெள்ள மெள்ளப் பொது ஜனங்களின் காதிற்கு எட்டிவிட்டது. அவர்களுக்கு உண்டான ஆத்திரத்திற்கும் கோபத் திற்கும் அளவில்லை. பொது ஜனங்கள் தங்கள் கைகளில் கத்தியும், வில்லும், அம்புமாக அந்தப் புஷ்கரனைத் தேடிப்போய் அவன் வீட்டைக் கொளுத்தி, அவனுடைய தட்டுமுட்டுச் சாமான் களை எல்லாம் நாசமாக்கி, அவனையும் பிடித்துத் தங்கள் ஆத்திரந்தீருமட்டும் நையப் புடைத்தனர். அவன் அடி தாங்கமாட்டாமல் அங்கேயே அப் பொழுதே மடிந்துபோனான்.

"பண ஆசைகொண்டு பாலர்களைக் கொல்லு வித்த பேயாண்டி ஒழிந்தான்" என்று மக்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

## 3. சோமுவும், தாமுவும்

ஓர் ஊரில் 'சோமசுந்தரன்' என்ற சிறுவன் ஒருவன் இருந்தான். அவனை 'சோமு, சோமு' என்று அவன் வீட்டார் அழைப்பது வழக்கம். அவன் காலையில் படுக்கையை விட்டு எழமாட்டான். தகப்பனாரோ காலையில் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து குளித்துவிட்டு, கையில் சாப்பாடு எடுத்துக்கொண்டு அயல் ஊருக்கு வேலை பார்க்கப் போய்விடுவார்.

சோமுவோ,தாயார் எழுப்ப எழுப்ப திரும்பித் திரும்பிப் படுத்துத் தூங்கிக்கொண்டிருப்பான். எழுந்ததும், பல் விளக்காமலேயே தனக்கு ஆகாரங் கேட்பான். சில சமயம், காப்பியும் சாப்பிட்டுவிடுவான்! அவனுடைய தாயார் இரண்டு அடி கொடுத்ததும், பல் விளக்கித் தோசை தின்பான். சாப்பிட்ட வாயைக் கொப்பளிக்கவுமாட்டான்; கழுவவுமாட்டான்; துடைக்கவுமாட்டான். அப்படிப்பட்ட மட்டிப் பையனாக அவன் வளர்ந்து, அவ்வூரிலுள்ள சோம்பேறிப் பிள்ளைகளுடனே விளையாடி வருவான். பெற்றோருக்கு இவனைப்பற்றிக் கலக்கம் உண்டாயிற்று. இப்படியே விட்டுவிட்டால் கெட்டுப் போவானே என்று யோசித்து ஒரு கண்டிப்பான உபாத்தியாயரிடம் விட்டார்கள்.

அவர் பெயர் தாமோதரப் பிள்ளை. அவரை 'தாமு உபாத்தியாயர்' என்று ஊரார் சொல்லுவார்

கள். அவர் தம்மிடம் வந்த எல்லா மாணுக்கரை யும் பாரபட்சமில்லாமல் கண்டிப்பாக நடத்தி, நற்குணமும் நற்பழக்கமும் உள்ளவர்களாக்கி நல் அறிவு உடையவர்களாக இருக்கும்படி போதித்து, ஊராரின் அன்பையும் மதிப்பையும் பெற்றிருந் தார்.

இவரிடமே சோமுவும் விடப்பட்டான். சோமு தன் வகுப்புப் பிள்ளைகள் எவ்விதச் சுறு சுறுப்பும் சுத்தமுமுடையவர்களா யிருந்தார்கள் என்பதைக் கவனித்துக்கொண்டான். தன்னைத் தானே கவனித்துத் தன்னையும் திருத்திக்கொள்ள ஆசை கொண்டான். சில நாள் ஒழுங்காய்ப் பள்ளி போய் வந்தான். ஆனால் சில சமயங்களில் தாமு உபாத்தியாயர் குற்றஞ்செய்த மாணவரைத் தண்டித்ததைப் பார்த்தபோது மனங்கலங்கித் தவிப்பான். பொதுவாக அவரைக் கண்டாலே அவனுக்கு ஒரு பயமும் திகிலும் உண்டாயின. அவரிடம் இருக்கவே அவனுக்கு விருப்பம் இல்லை.

ஒருநாள் பகல் சாப்பாடான பிறகு வீட்டில் யாரிடமும் சொல்லாமல் ஓட்டம் பிடித்தான் சோமு. வழியில் ஒரு பெரியவர் சோமுவை நிறுத்தி, 'ஏனப்பா! இப்படி இளைக்க இளைக்க ஓடு கிறாய்?' என்று கேட்டார்.

சோமு உண்மையே பேசுங் குணமுடையவ னாக இருந்ததால், தனக்கு தாமு உபாத்தியாயரைக் காணவே பிடிப்பதில்லை என்றும், தன்னைத் தன் பெற்றோர் அவரிடம் சேர்த்திருந்ததால் அவரை விட்டு எப்படியாவது தப்பிப் பிழைக்கவே ஓடுவ தாகவும் மறுமொழி சொன்னான். அப்பெரியார், 'அப்பா! நானும் உன்னைப் போலவே ஒருவரிடம்

உழைக்கப் பிரியப்படாமல், வேறு இடம் போகிறேன். நீயும் என்னோடு வா; நாம் இருவருமாகப் போவோம்' என்று சொல்ல, சோமு சம்மதித்து அவர் பின்னே சென்றான்.



சோமு பெரியவரைச் சந்தித்தல்

கொஞ்ச தூரம் சென்றதும், பக்கத்து வயலில் சிலர் அறுப்பு அறுத்துக்கொண்டிருந்ததைப் பார்த்த சோமு தானும் போய் அங்கு அறுப்பறுத்துக் கொண்டிருந்தான். பெரியவர் சிறிது இளைப்பாற உட்கார்ந்து சுருட்டுக் குடித்துக்கொண்டிருந்தார். திடீரென்று, சோமு அவரை அணுகி, 'வாரும் போவோம்' என்றழைத்தான். பெரியவர், 'ஏன் இவ்வளவு சீக்கிரம் அறுப்புப் புளித்துப் போனது?' என்று கேட்டார்.

சோமு, 'அதோ சிறிது தூரத்திலிருந்து வேலை வாங்கிக்கொண்டிருப்பவர் தாமு உபாத்தியாயர்

போலவே இருக்கிறார்; அவரேதான் என்று நிச்சயிக்கிறேன். அவர் வாடையே வேண்டாம் என்று தானே புறப்பட்டேன்: இங்கேயும் அவர் வர வேண்டுமா!' என்று வியாகுலப்பட்டான்.

அதற்குப் பெரியவர் 'அப்பா! உன் தாமு உபாத்தியாயர் மேற்குலத்திற் பிறந்த ஓர் உத்தமர். அவருக்குச் சுற்றத்தார், தாயாதிகள் முதலியவர் எல்லாம் நிறைந்த ஒரு பெருங் குடும்பம் உண்டு. பருந்து எடுத்துப்போட்ட கோழிக்குஞ்சுபோல, ஒன்றியாகத் தோன்றி ஒரு குடும்பத்தை உண்டாக்கியவர் அல்லர். அவர் குடும்பம் ஓர் ஆலமரம் போன்றது. அவருடைய தாயாதிகளில் அநேகர் அவர் சாயலாகவே இருப்பர். அதில் ஒன்றும் அதிசயம் இல்லை. நீ பார்க்கிற அந்த மனிதரும் ஒரு தாயாதியே!' என்றார்.

பெரியார் என்ன சமாதானங் கூறியும் சோமுவுக்கு மன அமைதி உண்டாகவில்லை. ஆகவே அவ்விடம் விட்டு வேற்றிடம் சென்றார்கள் இருவரும்.

இப் புது இடத்தில் சில பெண்களும் பையன்களும் நடனஞ் செய்துகொண்டிருந்தனர். மிக இன்பமான இராகங்களும், அபிநயங்களும், தாள வரிசையும் பக்க மேளமும், பிற வாத்தியங்களும் சோமுவுக்கு மகா ஆனந்தத்தைக் கொடுத்தன.

ஆனால், திடீரென்று, பக்க மேளக்காரரில் ஒருவர் எத்தனை சாமர்த்தியமாய் வாசிக்கிறார் என்று வியந்து, அவர் யாரென்று அவரைக் குறிப்பாகப் பார்க்கவே, சோமு யாரைக் கண்டான் தெரியுமா? தாமு உபாத்தியாயரையேதான்!

என்ன செய்வான் சோமு! 'போதும்; நாட்டியம் பார்த்ததும் போதும்; நல்ல மேளம் கேட்டதும் போதும்! வேறு எங்கேயாவது போகலாம் வாரும்' என்று பெரியாரைத் தொல்லை செய்ய ஆரம்பித்தான். அவர் 'இவர் உன் உபாத்தியாயரல்லர். தாமுவின் ஓர் தாயாதியே. பக்கமேளங் கற்றுக் கைதேர்ந்தவர் என்று பெயர் எடுத்தவர் அப்பா இவர்,' என்று எவ்வளவு சொல்லியும் சோமு கேட்கவில்லை.

ஆகவே இருவரும் நடன சபையை விட்டு வேறு இடம் நோக்கிப் போய்க்கொண்டே இருந்தார்கள். வழியில் ஓர் ஆலமரத்தடியில் படுத்து இளைப்பாறிக்கொண்டிருந்த ஒரு கூட்டத்தைக் கண்டான் சோமு.

'அங்கே போய் இளைப்பாறுவோம் வாருங்கள். சோம்பேறிகளிருக்கும் இடத்தைக் கண்டால் என் குருவுக்கு ஆகாது. இங்குதான் அவர் வர மாட்டார்; வாருங்கள், அங்கே போவோம்' என்று பெரியாரைக் கூட்டிக்கொண்டு ஆலமரத்தடிக்குச் சென்றான். இங்கோ அவன் கண்டதென்ன?

இளைப்பாறி நித்திரை செய்துகொண்டிருந்தவருள் பிரதானமான ஆட்கள் யார் யார் என்று சோமு ஒரு சுற்றுப் பார்த்தபோது அங்கும் தாமு உபாத்தியாயரே அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்தார்!

அக் கூட்டத்தையும் விட்டு வேறு இடங்களுக்குச் செல்லலாயினர் இருவரும். இவர்கள் எந்தெந்தச் சத்திரம் சாவடிகளில் தங்கினார்களோ அந்த அந்த இடங்களில் சோமுவுக்குத்

தோன்றிய காட்சி, தாமு உபாத்தியாயரின் உருவமும் சாயலுந்தான்.

சோமு அலுத்துப் போய், 'வெளி உலகம் முழுதும் தாமு மயமானால் நான் பள்ளிக்கூடத்திற்கே போகலாம் போலிருக்கிறதே!' என்றான்.

பெரியார், 'இதோ பக்கத்தில்தானே இருக்கிறது பாடசாலை! வா போகலாம்' என்று சோமுவை அழைத்துக்கொண்டு சென்றார்.

அப்போதுதான் சோமு, அந்தப் பெரியாரின் முகத்தை நிமிர்ந்து ஊன்றிக் கவனித்தான். அவரே தாமு உபாத்தியாயர் என்பதை உணர்ந்தான்!!!

அன்று முதல் அவன் கவனமும் கருத்துமாகப் படித்து, தாமு உபாத்தியாயரிடம் அன்பும் மரியாதையும் உள்ளவனாக நடந்துகொண்டு அறிவாளி ஆனான். இவனைப்பற்றிக் கலக்கங் கொண்டிருந்த பெற்றோர், கவலை நீங்கிச் சந்தோஷமாயிருந்தனர். சோமுவின் அறிவு வளர வளர, அவனுக்கு அவன் உபாத்தியாயர் முகம், தன் தாயார் முகத்தைப்போல அவ்வளவு ஆனந்தங் கொடுக்கத்தக்கதாக இருந்தது. அவன் தன் குருவை என்றும் போற்றி வந்தான்.

## 4. அதிசய வாத்து

ஒரு ஊரில் ஒரு கிழ விதவை இருந்தாள். அவளுக்கு ஒரே மகன். அவனைப் பள்ளிக்கு அனுப்பி வைத்தாள். ஆனால் அவனோ ஒரு விதவையின் மகனாக, வீட்டில் கண்டிக்கக்கூடியவர் யாரும் இல்லாததால் ஒழுங்காய்ப் படிப்பது

கிடையாது. உபாத்திமாரும் அவனுக்குப் படிப்பு வராதெனச் சொல்லிவிட்டார்கள். பள்ளிக்கூடப் பிள்ளைகள் எல்லாரும் அவனை 'மக்கு' என்றே சொல்லி வந்தார்கள். அந்தக் கிழவிக்கோ இது மகா வருத்தமாக இருந்தது.

தன் தாயார் படும் துக்கத்தை அவன் அடிக்கடி கவனித்து வந்தான். ஒருநாள் சுந்தரம் தன் தாயினிடத்தில் 'அம்மா! நீ ஏன் எனக்காக வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறாய்? எனக்குக் கொஞ்சம் கட்டுச் சோறுமட்டும் கட்டிக்கொடு! நான் போய் ஏதாவது சம்பாதித்துக்கொண்டு வருகிறேன்' என்று கேட்டுக்கொண்டான். தாயும் மிக்க சந்தோஷமாக அவனுக்குக் கட்டுச்சோறு கட்டிக் கொடுத்தனுப்பினாள்.

சுந்தரம் தன் கட்டமுதை ஒரு குச்சியில் மாட்டிக்கொண்டு, அதைத் தன் தோள்மேல் வைத்துக் கொண்டு, ஊருக்கு வெளிப்புறமாக நடந்து சென்று ஒரு உழவனிடம் போய் 'ஐயா! உங்கள் பண்ணையில் வேலை செய்ய ஒரு பையன் தேவையா?' என்று விசாரித்தான். அந்த விவசாயி, தனக்கு 'ஒரு ஆள் தேவைதான்' என்றார்.

'அப்படியானால் நான் வேலைக்கு வருகிறேன்' என்றான் சுந்தரம். அவர், 'கூலி என்ன கேட்கிறாய்?' என்றார். பையன் 'என்ன கூலி! இரண்டணாவும், ஒரு பச்சைப் பட்டாணியுந்தான்!' என்றான். அந்தப் பண்ணைக்காரரும் அதற்கு ஒத்துக் கொண்டார். சுந்தரம், வேலையைச் செய்து முடித்து விட்டுக் கூலியைப் பேசியபடி பெற்றுக் கொண்டான்.

சுந்தரம், திரும்பியபோது வேறொரு பண்ணையில் ஒரு கிழவி, தன் வாத்துகளுக்கு தீனி போட்டுக்

கொண்டிருக்கக் கண்டான். அந்தக் கிழவியிட மிருந்து ஒரு வாத்தை தானடைய வேண்டும் என்று ஒரு யோசனை செய்தான். அவளிடம் போய் 'பாட்டி! ஒரு சமாச்சாரம். இதோ; என்னிடம் ஒரு பச்சைப் பட்டாணி இருக்கிறது. அதோ அந்த வாசற்கதவண்டையில் நிற்கிற வெள்ளை வாத்துக்கு இதைப்போடுகிறேன். அது இந்தப் பச்சைப் பட்டாணியைத் தின்றுவிட்டால் சரி, வாத்து உன்னுடையதுதான். தின்னவிட் டால் வாத்து என்னுடையது; என் கையில் பிடித்துக் கொடுத்துவிட வேண்டும்' என்று ஒரு பந்தயம் போட்டான்.

கிழவிக்குத் தன் வாத்து அந்தப் பட்டாணி யைத் தின்றுவிடும் என்பது நிச்சயமாகத் தெரியும்; ஆகையால் 'சரி' என்றாள். ஆகவே பையன் பட்டாணியை வாத்துக்கு முன்னே போட்டான். அது உடனே அதை விழுங்கிவிட்டது.

பையனோ, பேசாமல் வந்துவிடவேண்டி யிருக்க, 'ஐயையோ! ஐயையோ! நான் என்ன செய்வேன்! இன்று நாள் முழுதும் கஷ்டப்பட்டு உழைத்த கூலி போயிற்றே! வாத்தையும் இழந்தேனே!' என்று பலமாய் அலறி அழ ஆரம்பித்தான். கிழவியோ 'கூச்சல் போடாதேடா மடையா! வீட்டை விட்டுச் சீக்கிரம் ஓடிப்போ' என்று கட்டளையிட்டாள்.

கிழவி எவ்வளவு கடுமையாகக் கட்டளையிட் டாளோ அவ்வளவுக்கு அதிகமாகச் சுந்தரம் இன் னும் பலமாக அலற ஆரம்பித்தான். கிழவிக்கோ இந்த கூக்குரல் பிடிக்கவில்லை. இந்தப் பந்தயத் தைப்பற்றி யாரேனும் 'இந்தச் சிறு பையனிடம்

இத்தனை பெரிய மனுஷி இப்படித்தானு பந்தயம் போடுவது’ என்று சொல்வார்களே என்ற பயம் ஒரு பக்கம்; தொட்டிலில், இரவு முழுதும் வயிற்று வலியால் அவஸ்தைப்பட்டு அப்போதுதான் தூங்கிய தன் பேரப்பிள்ளை விழித்துக்கொள்ளுமே என்கிற பயம் மற்றொரு பக்கம்! ‘அடே! போக்கிரிப் பயலே! அழாதே! சப்தம் போடாதே! குழந்தை விழித்துக்கொள்ளப் போகிறது! நீ வேண்டுமானுல் அந்த வாத்தை எடுத்துக்கொண்டு போ!’ என்று சொல்லிவிட்டாள்.

பையன் உடனே வாத்தின் கழுத்தைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு கொஞ்ச தூரம் ஓடோடிச் சென்று பிறகு வாத்தைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு, ஒய்யாரமாய் நடக்கலானுன். வாத்துத் தனக்குக் கிடைத்த சந்தோஷத்தாலும், தான் அன்று செய்த சம்பாத்தியத்தின் சந்தோஷத்தாலும் ஒரு சத்திரத்துச் சாப்பாட்டு விடுதிக்குப் போனுன். அந்தச் சத்திரக்காரனிடம் வாத்தை ஒப்பித்துவிட்டுத் தன் களைப்புத் தீர சிற்றுண்டியருந்தி சிறிதுநேரம் உறங்கினுன். இந்தச் சமயத்தில், வெளியே உலாவப்போயிருந்த சத்திரக்காரன் மகள் திரும்பி சத்திர விடுதிக்குள் நுழைந்தாள். தன் தகப்பனிடம் ஓர் அழகிய வாத்து இருப்பதைப் பார்த்து, அதன் அழகைப் புகழ்ந்து கொண்டே அதன் வாலின் ஒரு இறகைத் தன் கூந்தலில் செருகிக்கொள்ள விரும்பி அதன் ஓர் இறகைப் பிடுங்கினுள். ஆனுல் இறகு கைக்கு வருவதற்குப் பதிலாக அவள் கையே வாத்துடன் ஒட்டிக்கொண்டது! அவள் ‘ஐயோ! இது என்ன விபரீதம்! என் கையை எடுக்க முடியவில்லையே!’ என்று கூச்சலிட்டாள்.

இந்த அழுகுரலைக் கேட்ட அவளுடைய தங்கை ஓடி வந்து தன் தமக்கைக்கு உதவி செய்ய நினைத்து தன் தமக்கையின் கையைப் பிடித்து இழுத்தாள். இவள் என்ன பிரயாசைப்பட்டும் தமக்கையின் கை வாத்தின் வாலைவிட்டு வராததுடன், தங்கையின் கையும் தமக்கையுடனேயோடு ஒட்டிக்கொண்டது!

பையன் சுந்தரம் தன் களைப்பும் நித்திரையும் தெளிந்து எழுந்து சத்திர விடுதிக்காரனுக்கு தான் கொடுக்கவேண்டிய தொகையைக் கொடுத்து விட்டு, தன் வாத்தைத் தூக்கிக்கொண்டு போக, வாத்திருந்த இடத்திற்குச் சென்றான். அங்கே இருந்த தன் வாத்தை யாரோ பெண்கள் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நினைத்துத் தான் அதைத் தூக்கிக்கொண்டு கிளம்பினான். அவன் பின்னே இரண்டு இளம் பெண்களும் வாத்துடன் தொடர்ந்து செல்லலாயினர். இந்த விஷயத்தைக் கண்டவர்கள் ஓட்டல்காரனிடம் தெரிவிக்க, அவன் ‘அடே பயலே! என் பெண்களை ஏண்டா கூட்டிப்போகிறாய்? விட்டுவிடு, விட்டுவிடு’ என்று அலறிக்கொண்டே ஓடித் தன் பெண்களைப் பிடித்து ‘வாருங்கள் என் மக்களே!’ என்றழைத்தான். இவன் அவர்களைத் தொட்டமாத்திரத்தில் தானும் அவர்களுடன் ஒட்டிக்கொண்டானே ஒழிய, பெண்கள் வந்தபாடாயில்லை. இவனும் அவர்களைத் தொடர்ந்தான். இவர்கள் ஒருவர் பின் ஒருவராய், பையன், வாத்து, மூத்த பெண், இளைய பெண், தகப்பன் என்று தொடர்ந்து சென்ற காட்சி தெருவார்க்கெல்லாம் ஒரு நல்ல வேடிக்கையாயிற்று.

சுந்தரம் தன் வீட்டைப்பற்றியே நினைக்க வில்லை. எந்தெந்த வழியாகவோ சென்று வேறொரு இராஜ்யத்திற்குள் நுழைந்தான்.

அந்தத் தேசத்து அரசனுக்கு ஒரு மகள். அவளை வெகு அருமையாக அவன் வளர்த்து வந்தான். அவளும் பருவம் அடைந்து வெகு இலட்சணமாய் விளங்கிய சமயத்தில் அவளுக்கு சித்தப்பிரமை வந்து எவருடனும் பேசுவதும் சிரிப்பதுமில்லாமலும், தோழியருடன் விளையாடு வதுமில்லாமலும் ஒரு பெரும் வியாகுலம் பிடித்த வள் போலிருந்தாள். அரசன் சகல வைத்திய மும் செய்து பார்த்துவிட்டுத், தன் மகளைச் சிரிக்கச் செய்பவனுக்குப் பாதி ராஜ்யம் கொடுத்துத் தன் பெண்ணையும் கட்டிக் கொடுப்பதாகப் பறைசாற்றி இருந்தான்.

சுந்தரமும், அவனை யொட்டியவரும் அரண் மனைக்காரர் தெரு வழியாகச் சென்றுகொண்டிருந் ததை, தன் உப்பரிகை மேலிருந்து பலகணி வழி யாகப் பார்த்தாள் அரசிளங்குமரி. அவளுக்கோ எத்தனையோ நாட்களாக வராத சிரிப்பெல்லாம் இக் காட்சியைக் கண்டதும் 'குபீர்' என்று வரவே, குலுங்கக் குலுங்கச் சிரித்துவிட்டாள்!

'இளவரசி சிரித்தாள்' என்ற செய்தி உடனே அரசனுக்கு அறிவிக்கப்பட்டது. அரசன் அக மகிழ்ந்து, 'அப்படியா! சிரிப்புக்குக் காரணம் யார்?' என்று அதிசயத்துடனும் ஆவலுடனும் கேட்டான்.

விஷயம் அறிந்த உடனே சுந்தரத்தை வர வழைத்து, அவனுடைய பெண்ணுக்காக அவன் பறைசாற்றி இருந்ததைப்பற்றித் தெரிவித்தான்.

அப்போது, அந்த வாத்து, கேட்பவர் நடுங்கும்படி ஒரு சப்தம் போட்டுத் தன் வாயிலிருந்து ஒரு பச்சைப் பட்டாணியைக் கக்கிற்று! அப்போது தான் அவரவர் தனித்தனியாகப் பிரிந்தனர். உடனே அரசன் வெகு ஆடம்பரமாக அவனுக்கு இந்த இரண்டு பெண்களையும் கலியாணம் செய்து வைத்துப் பாதி ராஜ்யத்திற்கு அரசனுக்கி மகுடாபிஷேகம் செய்தான். சுந்தரமும் தன் தாயாரை அழைப்பித்து, வெகு ஆனந்தமாய் அரசாட்சி செலுத்தி மகிழ்ந்தான்.

## 5. நிப்பான ஆரா

பல வருஷங்களுக்கு முன் 'நிப்பான்' என்ற தேசத்திலே இருந்த அரசனுக்கு இரண்டு மனைவி கள் இருந்தனர். மூத்தவள் நற்குணம் நிறைந்த வள். நல்ல தோற்றமும், அழகும் பொருந்தியவள். குடிகள் எல்லாம் அவளை அன்புடன் நேசித்தார் கள். அரசனுக்கும் அவளிடம் பிரியம் உண்டு. என்றாலும், மற்றொரு பெண்ணை ஏன் கலியாணம் செய்துகொண்டான் என்பதுமட்டும் குடிகளுக்கு விளங்கவில்லை; ஏனெனில், இளைய இராணியாக வந்தவள் அழகும், நற்குணமுமில்லாதவள். 'அரசன் மந்திரத்தாலோ மருந்தாலோ மயங்கி விட்டான்' என்று தேசத்தார் பேசிவந்தனர்.

ஒரு நாள் அரசன் உல்லாசமாகத் தன் இரு மனைவியருடன் மீன் பிடிக்கச் சென்று தன் ஆசை தீரச் சிறு மீன்களும், பெரு மீன்களும், பல வர்ண மீன்களும், தட்டை மீன்களும், வட்ட மீன்களும், சட்டியிலொட்டிகளும், சேல்களும், கெண்டை களுமாகப் பல சாதி மீன்களைப் பிடித்துக் களித்

தான். அவற்றைப் பிடித்துப் பிடித்துத் தன் இராணிகளிடம் பையிலே போடக் கொடுத்து வந்தான். அவர்கள் போட்டு வந்ததாகவே அரசன் எண்ணி இருந்தான்.

ஆனால் இளைய இராணியோ, நல்ல அழகிய பெருத்த உயர் சாதி மீன்களை உயிருடனேயே விழுங்கி விழுங்கி வந்தாள். இதை யாருமே கவனிக்கவில்லை.



அரசன் தன் இரு மனைவிகளுடன் பந்தி அமர்தல்

போஜன வேளை வந்ததும் பணியாட்கள் அரசனைப் போஜனஞ் செய்ய அழைத்தனர். அரசன் தன் இரு பத்தினிகளுடனும் அமர்ந்து புசிக்கலானான். நெடுநேரமாகியும் தான் பிரியமாய்ப் பிடித்த பெருத்த உயர்ந்த சாதி மீன்கள் மட்டும் பரிமாறப் படவில்லை. அம்மீன்கள் மட்டும் மிக்க உருசியுள்

ளவை. அவை எங்கே போயினவென்று இளை யாளைக் கேட்டான். உடனே இளையாள், குசு குசு மந்திரமாக 'மூத்தாள் அவற்றைப் பச்சையாகவே விழுங்கிப் போட்டாள்' என்று அவள்மேல் தனக்கு ஏற்பட்டிருந்த பகையைத் தீர்க்க இதுவே நல்ல சமயம் என்று எண்ணி அபாண்டமாகச் சொல்லிவிட்டாள்.

அரசனுக்கோ கோபமும், ஆச்சரியமும், பய மும் உண்டாயின. ஏனெனில், பச்சை மீனை உயி ருடன் விழுங்குகிறவள் ஒரு கைதேர்ந்த மந்திர வாதினியாகத்தானிருக்க வேண்டும் என்று தீர் மானித்துக்கொண்டான். ஒன்றும் விசாரணையே செய்யாமல் உடனே தன் கொலையாளிகளை வரு வித்து மூத்த இராணியைக் கொன்று, கத்தியை இரத்தத்துடன் தனக்குக் காட்டவேண்டும் என்ற கடும் உத்திரவிட்டான்.

அரசன் உத்திரவின்படியே ஆட்கள் அரசியா ரைத் தோட்டத்தின் கடைசியில் இருந்த குளத் தருகில் கொண்டுபோய் வெட்டிவிட்டார்கள்.

நிப்பான் (ஜப்பான்) தேசமக்கள், இராஜ விசுவாசத்தில் தலைசிறந்து விளங்குபவர்கள். அரசனுக்கு வெற்றியுண்டாக ,நிராயுதபாணியாக யாரேனும் ஒருவர் மரிக்கவேண்டும் என்று சொன்னால் போதும்; இலட்சக்கணக்கான நாட்டு மக்கள் 'நான், நான்' என்று முன்வருவர். நாட்டு மக்களே இப்படி என்றால், பணியாட்களுக்கா சொல்ல வேண்டும்!

அரசியைக் கொலையாளிகள் வெட்டினர். அரசியின் உருவம் ஓர் பொன்னுமையாக மாறி

அக குளத்துட் குதித்துவிட்டதை அவாகள காணவில்லை.

மூத்தாளுக்கு ஏழுவயதுப் பெண் ஒருத்தி இருந்தாள். தன் தாய்க்கு ஏற்பட்டதை நினைத்து அழுதால் சிறிய தாயார் திட்டுவாள். இதற்குப் பயந்து அச்சிறுமி தோட்டத்தின் கடைசியி லிருந்த குளத்தங்கரையில் உட்கார்ந்து அழுது விட்டு வருவது வழக்கம்.

ஒருநாள் மாலை இப்படியிருக்கையில் இச் சிறுமி தன் தாயை நினைத்து அழுது, சிறிது நேரத் திற்கெல்லாம் குளத்தின் நீர் மட்டத்திற்கு அடியி லிருந்து ஓர் அழகிய ஆமை நீந்தி வருவதைக் கண்டாள். ஆமை, எப்பொழுதும் ஆட்களைக் கண்டால் ஒளிந்துகொள்வது வழக்கம். இந்த ஆமையோ கீழ் இருந்து மேலே ஜலமட்டத்திற்கு வந்துகொண்டிருந்தது. அந்த ஆமையின் நிறமோ அவள் கண்ணைப் பறித்தது. சிறுமி அதன் நிறத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டாள். மேலும், அதிசயமாய் அந்த ஆமை பேசவும் தொடங்கியது, பிறர் யாரும் இல்லாததை அறிந்த ஆமை, சிறுமியுடன் பேசி தான்தான் அவ ளுடைய அருமைத் தாயார் என்பதை வெளி யிட்டது. இதைக் கேட்டதும், பெண்ணுக்கு மிகுந்த சந்தோஷமுண்டாயிற்று. அன்று முதல் ஒவ்வொரு நாள் மாலையிலும் அவள் குளத்திற்குப் போகத் தவறுவது இல்லை.

ஒருநாள் இளைய இராணி இச்சிறுமி தோட்டத் துக்குத் தப்பாமல் போய் வருவதையும், வந்தபிறகு முகக்களையுடன் இருப்பதையும் கண்டு, குளக் கரைக்கு ஒருநாள் மாலை சிறுமிக்குத் தெரியாமலே போய் ஒரு புதரில் மறைந்திருந்தாள்.

சிறுமி குளக்கரையில் உட்கார்ந்து ஆமை யுடன் பேசிக்கொண்டிருந்ததைக் கண்டுவிட்டாள்!

அரண்மனை வந்து சேர்ந்தபிறகு 'எப்படி அந்தப் பொன்னுமையைக் கொல்லலாம்' என்று யோசனை செய்தாள். யோசனையும் உதித்தது. கொஞ்சம் பொரி அரிசியைக் கொண்டுவந்து தன் படுக்கைக்கடியில் பரப்பிவிட்டுப் படுக்கைமேற் புரண்டாள். புரளவே அது நறநறவென்று ஒரு சப்தம் உண்டாக்கியது கண்டு 'இதுவே நல்ல உபாயம்' என்று வைத்துக்கொண்டு படுத்தபடியே இருந்துகொண்டு அரசனை வருவித்தாள். அரசன் வந்ததும் தான் உடம்பு வலியால் அவஸ்தைப் படுவதாகவும், தன் எலும்புகள் எல்லாம் முறிவது போல் இருப்பதாகவும், சொல்லிப் பாசாங்கு செய்து நீலிக் கண்ணீர் விட்டாள்.

அரசன், துக்கப்பட்டு வைத்தியருக்கு ஆளனுப்பி, அவளுக்கு என்ன ஆகாரம் தேவை என்று விசாரித்தான். 'பொன்னுமைதான் உடல் வலியைத் தீர்க்கும்' என்று அரசனுக்கு அறிவிக் கப்பட்டது. உடனே அரசன், வலைஞர்களை வரு வித்து ஒரு பொன்னுமை பிடித்துக்கொண்டு வரும்படி கட்டளையிட்டான்.

பொன்னுமை விஷயத்தைக் கேள்விப்பட்ட தும் சிறுமி தன் தாயிடம் ஓடி இளையாளின் சூதை வெளியிட்டாள். அதற்குப் பொன்னுமை 'நீ வருத்தப்படாதே! என்னை அவள் தின்றுவிட்டா லும் என் எலும்புகளைக் கவனமாய் எடுத்து வைத்திருந்து, தோட்டத்திற்கு வெளியே போகும் சாலையின் முச்சந்தியில் புதைத்துவிட்டால், நான் சாகமாட்டேன்' என்றது.

செம்படவர், அரசனுடைய ஆக்ஞைப்படி எல்லாக் குளங்குட்டைகளிலும் வலைவீசிப் பார்த்தும் அகப்படாமையால் அரண்மனைத் தோட்டத்திலேயிருந்த குளத்திலேயே இருந்த பொன்னுமையைப் பிடித்துக்கொண்டு வந்துவிட்டார்கள்.

இளைய இராணியின் சந்தோஷமோ கொஞ்சநஞ்சமல்ல! தானே சமையலறைக்குச் சென்று ஒரு பாத்திரத்தில் நீர்விட்டு அதில் ஆமையைப் போட்டு அடுப்பை நன்ருய் எரிக்கச் சொல்லிச் சிறுமிக்குத் திட்டமிட்டுச் சென்றுள். ஆனால் சிறுமியோ அடுப்பை எரிக்காமலே காலங் கடத்தி வந்தாள் எனக்கண்டு அவளை நன்ருய் அடித்துவிட்டுத் தானே போய் அடுப்பை எரித்து, ஆமையைக் கொன்று, கறி சமைத்து, தன் சிநேகிதிகளையெல்லாம் வரவழைத்து ஒரு பெரும் விருந்து வைத்துச் சாப்பிட்டாள்.

நிப்பான்காரர் (ஜப்பான்காரர்) வீடு நம் வீடுகள் போல், கற்களாலும் சுண்ணும்பாலும் கட்டப்பட்டவை அல்ல. அவை மரங்களாலும், மூங்கில்களாலும் தடுக்குகளாலும் ஆனவை. அவைகளை வெகு சீக்கிரத்தில் இடம்விட்டு இடம் கொண்டுபோய்விடலாம். அவர்கள் இவ்வாறு தங்கள் வீடுகளை அமைப்பதின் காரணம், அங்குள்ள எரிமலைகளினுலேயே! எந்த நேரத்தில், எந்த எரிமலையாவது புகைய ஆரம்பிப்பதைக் கண்டால், அந்நாட்டார் தங்கள் வீடுகளைப் பிரித்தெடுத்துக்கொண்டு எங்கேனும் வேறு இடங்களுக்கு ஓடி உயிர் பிழைப்பார்கள்.

இவர்கள் விருந்துண்ட இடம் பரண் போன்றது. அதன் இடையே இருந்த கிடுக்குகளின்

வழியாக, விருந்தினரும், சாப்பிட்டவர் அனை வரும் தங்கள் எலும்புகளைக் கீழே போட்டார்கள். சிறுமியாகிய சீலாவை, இராணி விருந்தில் சேர்க் காமல் சமையலறையிலிருந்தே பந்திக்குப் பதார்த் தங்கள் அனுப்பும் வேலையைச் செய்துவரக் கட்டளையிட்டிருந்தாள்.

ஆகையால் இது சீலாவுக்கு மிக்க அநுகூல மாய் முடிந்தது. சீலா, ஒருவருக்கும் தெரியாமல், விருந்தறைக்குக் கீழே நுழைந்து, விழுந்து கிடந்த சகல எலும்புகளையும் பொறுக்கிக்கொண்டு, இருட்டோடு இருட்டாகத் தோட்டத்தின் வழியே ஓடி, சாலையின் முச்சந்து கூடிய இடத்தில், ஒரு குழி தோண்டிப் புதைத்துவிட்டு, இருக்க வேண் டிய இடத்தில் வீட்டில் வந்து உட்கார்ந்துகொண் டாள். விருந்து முடிந்ததும் பாட்டுக் கச்சேரியும் நடனமும் வெகு தடபுடலாய் நடைபெற்று, கடைசியில் அவரவர் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந் தார்கள். சீலா, சாப்பிட்டாளா என்றுகூடக் கேட்பவரில்லை. உண்மையில் சீலா சாப்பிடவே இல்லை. அவளுக்கு, எப்படித்தான் தன் தாயைத் தின்ன மனம் வரும்!

அன்றிரவு முழுவதும் அவள் தூங்கவு மில்லை

மறுநாள் பொழுது விடிந்ததும் விடியாததுமா யிருந்தபோதே ஓடி, சீலா, தான் நேற்றிரவு எலும்பு புதைத்த இடத்தைப் பார்த்தாள். அங் கென்ன கண்டாள்! ஓர் இலையடர்ந்த அழகிய மரம்! அம்மரத்தில் ஓர் அழகிய கூடு, அதி லிருந்துகொண்டே இனிமையான பாட்டுகளைப் பாடிக்கொண்டிருந்த ஒரு கருங்குருவி! இக் குருவி

பாடிய இனிய பாடல்கள் தன் தாயைப்பற்றியே இருந்தன வென்று சீலா சீக்கிரம் கண்டு கொண்டாள்.

இந்தக் குருவியின் பாட்டு அரசன் காதினில் அதிகாலையில் அதிக இன்பமாய்த் தொனித்தது. அரசன், ஒரு மந்திரத்தால் கட்டுப்பட்டவன் போல உடனே எழுந்து அப்பாட்டு வரும் திசையை நோக்கியே நடந்து வந்து, சாலையின் முச்சந்தியில் நிற்கும் மரத்தையும், கூட்டையும் குருவியையுங் கண்டான். அக்குருவியின்மேல் அரசனுக்கு அதிகப் பிரியம் உண்டாயிற்று.

தன் படுக்கையறைக்குப் பக்கத்தில் இம்மரம் இருந்தால் தான் இன்பமாய் இதன் பாட்டைக் கேட்டு மகிழலாமே என்று எண்ணினன்.

தன் ஆட்களை யழைத்து அம்மரத்தை அசை யாமல் பெயர்த்து எடுத்துத் தன் படுக்கையறை அண்டையில் நட்டுவிட உத்திரவிட்டான். அப் படியே மரமும் நடப்பட்டது. அரசன் சில நாள் அக்குருவியின் பாட்டைக் கேட்டு மகிழ்ந்தான். சில வேளைகளில் அதன் பாட்டில் தன் மூத்த இராணியைப்பற்றி ஏதோ சொல்லப்படுவது போல் அவன் காதிற்பட்டது. ஆகவே அவ் வுத்தமியின் எண்ணம் அவனுக்குத் தோன்றலா யிற்று.

இப்படிச் சில நாள் கழிந்தபின், ஓர் நாளிரவில் அரசன் பள்ளியறை ஜன்னல் வழியாக இக்கருங் குருவி நுழைந்து, நன்ருய்த் தூங்கிக்கொண் டிருந்த அரசனை ஒரு கொத்துக் கொத்தி எழுப் பிற்று. அரசன் திடுக்கிட்டு விழித்தான். அவன் கண்டது யார்?

தான் அதிகமாய் நேசித்து வந்தவளும், தன்னால் கொலை செய்விக்கப்பட்டவளுமாகிய தன்னுடைய முதல் இராணியே!

அரசன் பயந்து போனான். என்றாலும், கொஞ்சம் தைரியங் கொண்டவன்போலப் பாவனை செய்து, 'நீ யார், உண்மையைக் கூறு' என்று அதட்டிக் கேட்டான். அந்த உருவமோ 'நானே உமது ஆசை மனைவி; முதல் இராணி' என்றது. அரசன் 'நீ உண்மையான என் முதல் இராணியேயானால் அவள் அணிந்திருந்த நகைகள் எவ்வெவை என்றும், அவற்றை அவள் எங்கெங்கே அணிந்திருந்தாள் என்பதையும் காண்பி' என்றான். அவ்வுருவம், உடனே அந்த நகைகளை அங்கிருந்த நகைப்பெட்டியிலிருந்து எடுத்துக் காட்டி, இந்திந்த நகைகளை, இங்கிங்கு அணிய வேண்டும் என்று அணிந்தே காண்பித்தது.

உடனே அரசன் அவள் உண்மை முதலரசி தான் என்று அறிந்துகொண்டு, 'பச்சை மீனை உயிருடன் விழுங்கியவள் இளையாள்தான்' என்று அவளிடம் உண்மையை அறிந்ததும், கடுங் கோபங்கொண்டு இளைய இராணியைச் சுண்ணாம்புக் காள்வாயில் வைத்துச் சுட்டெரிக்கச் செய்தான்.

சீலாவும், தாயும், அரசனும் வெகுநாள் சந்தோஷமாகவும், சமாதானமாகவும் வாழ்ந்து வந்தார்கள்.